Regd: No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone: 420212 4 பக்கம் விலை 80 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55

ஏடுகள்
சுவையும் பயனும் தரும் தமிழ் ஏடுகள் நிறையத் தோன்றவேண்டும். தமிழ் வளர ஏடுகளும் ஒரு கருவி தான்.
-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

நம்பிக்கை
ஏதாவது ஓரிடத்தில் நம்பிக்கை வைத்தே தீர வேண்டும். யாரையும் நம்பாமல் காரியமாற்றுவது இயலாத ஒன்று.
-புரட்சித்தலைவர்

மலர் 12 சென்னை 27-3-1988 ஞாயிறு வெளியீடு 28-3-1988 திங்கள் இதழ் 159

★ 1980ல் புரட்சித்தலைவர் நீதி கேட்டார்-இன்றைக்கு நான் நீதி கேட்கிறேன்

## இதயதெய்வம் புரட்சித்தலைவரின் குறிக்கோளை-கொள்கைகளை நிறைவேற்ற

# என்னை அர்ப்பணிக்கிறேன்

### லட்சோப லட்ச மக்கள்திரண்ட கோவை கூட்டத்தில் அன்னையார் உருக்கம்

கோவை மார்ச் 27- "ஏழை, எளியவர்களுக்காக வாழ்ந்தவர் புரட்சித் தலைவர். அவர்களைப்பற்றி எப்போதும் சிந்தித்தவர். அவர்களின் நல்வாழ்விற்காக, மேன்மைக்காக அரிய திட்டங்களைத் தீட்டியவர். அவரது கொள்கைகளை குறிக்கோள்களைக் இலட்சியங்களை நிறைவேற்ற என் வாழ்நாளையே அர்ப்பணிக்கிறேன்" என்று பலத்த ஆரவாரங்களுக்கிடையே அன்னை ஜானகி எம் ஜி ஆர் எழுச்சி முழக்கமிட்டார்.

கோவை சிதம்பரம் பூங்காவில் நடைபெற்ற பிரும்மாண்டமான கழகப்பொதுக் கூட்டத்தில் அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் கலந்து கொண்டு பேருரையாற்றினார்.

லட்சோபலட்சம் மக்கள் கலந்து கொண்டு வரலாறு படைத்த இக்கூட்டத்தில் அன்னையார் பேசும் போது ஆரவாரமும் கைதட்டல்களும், உணர்ச்சி மேலீடுகளுமாக ஒரு எழுச்சியுடன் கூட்டம் நடைபெற்றது. தாய்மார்கள் பெருமளவில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

அன்னையார் பேசும் போது கூறியதாவது:-

எங்களை வாழ வைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே வணக்கத்திற்குரிய பெரியோர்களே, என் இதய தெய்வத்தின் ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புக்களே.

உங்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கம்.

நாற்பது ஆண்டு காலம் புரட்சித்தலைவரின் துணைவியாக வாழ்ந்து இன்று அவரை பிரிந்து சோகச்சூழ்நிலையில் நிற்கிறேன்.

என்னைப் பாசத்தோடும் நேசத்தோடும் நீங்கள் வரவேற்ற பாங்கினைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன் நீங்கள் காட்டும் ஆதரவு எனக்கு ஆறுதல் அளிக்கிறது.

அன்றும் இன்றும் என்றும் புரட்சித்தலைவரின் பக்கம் நாங்கள் இருக்கிறோம் என்பதை உறுதிப்படுத்தும் வகையில் கடல் போன்ற கூட்டமாக இது உள்ளது.

#### புரட்சித் தலைவரைப் போலவே...

மதுரை, சேலம், கடலூர், கோவை ஆகிய இடங்களுக்கு புரட்சித்தலைவர் வந்தபோது எந்த முறையில் வரவேற்று பாராட்டினீர்களோ அதே முறையில் என்னையும் வரவேற்றுப் பாராட்டுகிறீர்கள்.

உங்கள் அன்புக்கும் பாசத்துக்கும் பாத்திரமாக என்றும் செயல்படுவேன். (பலத்த கைதட்டல்)

#### துவக்க காலங்களில்...

புரட்சித் தலைவரும் நான் வாழ்ந்த ஆரம்பகாலத்தில் வறுமையுடன் வாழ்ந்தோம் தமிழக மக்களின் நல்லாதரவால் படிப்படியாக நல்ல நிலைக்கு வந்தோம். அதே போல் உங்களையும் வாழ வைக்கப்பாடுபடுவேன். (ஆரவாரம் கைதட்டல்)

இதயதெய்வத்தின் குறிக்கோள் ஏழை எளியமக்களை நல்லமுறையில் வாழவைப்பது தான் அதற்கு என்றும் துணை நிற்பேன். (ஆரவாரம் கைதட்டல்)

#### அற்புதத் திட்டங்கள்

குழந்தைகளுக்கு சத்துணவு சீருடை பாடப்புத்தகங்களை புரட்சித்தலைவர் வழங்கினார் வீடுஇல்லாதவர்களுக்கு வீடு தேவையான தொழில் வசதி மற்றும் ஏராளமான திட்டங்களை புரட்சித்தலைவர் செயல்படுத்தினார்.

#### பல்கலைக் கழகம்

புரட்சித்தலைவர் எம்.ஜி. ஆர். ஒரு பல்கலைக்கழகம் பல்கலைக் கழகத்தில் நாற்பது ஆண்டு காலம் படித்து பயிற்சி பெற்றவள் நான். அவருக்குப் பின் கட்சி தலைமையை ஏற்கும்படி நீங்கள் வற்புறுத்தினீர்கள் அதனால் ஏற்றுக் கொண்டேன்.

#### முடிசூட்டி கழுத்தை வெட்டினர்

பிரதமரிடம் ஒத்துழைப்புக் கேட்டேன் உறுதி கொடுத்தார் நம்பினேன். முடிசூட்டிவிட்டு கடைசியில் கழுத்தைவெட்டி விட்டனர்.

#### நியாயம் கேட்கிறேன்

இது நியாயம்தானா என்று கேட்கத்தான் உங்கள் முன் வந்திருக்கிறேன்,

1980ல் ஆண்டு உங்களிடம் நீதி கேட்டு புரட்சித்தலைவர் வந்தார் அப்போது நல்ல தீர்ப்பு வழங்கினீர்கள் இன்று உங்கள் முன் நான் நீதி கேட்கிறேன். எனக்கு உங்களைத்தவிர யார் இருக்கிறார்கள்.

#### பதவி தேடிகள் செய்த சதி

அவரிடம் ஆட்சிபொறுப்பு இருந்த போது பதவி சுகம், அனுபவித்தவர்கள் இன்று கட்சியை பிளவுபடுத்தி விட்டார்கள்.

#### தர்மத்தின் வெற்றி

நான் கட்சிக்கு இனாமாகக் கொடுத்த தலைமைக் கழக அலுவலகம் நமக்கு திரும்ப கிடைத்துவிட்டது.

தியாகராயநகர் வீடும் நமக்கு கிடைத்து விட்டது இது தர்மத்தின் இரண்டாவது வெற்றி.

#### தேர்தல் பட்ஜெட்

கோவையில் நீண்ட நாட்களாக மூடிக்கிடக்கும் பஞ்சாலைகள் பற்றி பட்ஜெட்டில் குறிப்பிடப்படவில்லை இந்த பட்ஜெட் மக்கள் குறைகளைத் தீர்க்காது. இது தேர்தல் நேர பட்ஜெட். குடிநீர் தட்டுப்பாட்டை போக்குவதற்கு எந்த திட்டமும் மேற்கொள்ளப்படவில்லை. கோவையில் புறநகர் பகுதியில் வீடுகட்டும்திட்டம் நிறைவேற்றப்படவில்லை.

#### பிரபாகரனின் உயிருக்கு ஆபத்துஎன்றால்..

தமிழ் ஈழத்துக்காக போராடும் பிரபாகரனின் உயிர் உலக மக்களின் ஒட்டு மொத்த உயிர் இதைப் பிரதமர் ராஜீவ் உணர்ந்து பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண வேண்டும்.

இவ்வாறு ஜானகிஎம்ஜிஆர் பேசினார்.

கூட்டத்திற்கு நெகமம் கந்தசாமி தலைமை வகித்தார். மாவட்ட இணைச் செயலாளர்கள் க, மருதாசலம் நா கருப்பசாமி வரவேற்புரை நிகழ்த்தினார்கள்

கூட்டத்தில் கழக பொதுச் செயலாளர் [பொறுப்பு] இராகவானந்தம் ஆர் எம் வீ பஉச அமைப்புச் செயலாளர் சத்தியவாணிமுத்து கொள்கை பரப்புச் செயலாளர் முத்துசாமி தலைமை நிலையச்செயலாளர் ஆனூர் ஜெகதீசன் வலம்புரிஜான் எம் பி சுலோசனாசம்பத் மற்றும் வளர்மதி அடியார் ஆகியோர் பேசினர்.

அன்னை ஜானகி எம் ஜி ஆர் கோவை, மாநகர் மற்றும் புறநகர் மாவட்டங்களில் சுற்றுப்பயணம் செய்வதற்காக, சென்னையிலிருந்து விமானம் மூலம் நேற்று கோவை வந்தார்.

அவர் வந்த விமானம் காலை 10 மணியளவில் வந்து சேர்ந்தது.

விமானத்திலிருந்து அன்னை ஜானகிஎம்ஜிஆர் இறங்கியபோதுவிமானநிலையத்தில் குழுமியிருந்த லட்சக்கணக்கான மக்கள் புரட்சித்தலைவர் புகழ் வாழ்க, அன்னை ஜானகி எம். ஜி. ஆர். வாழ்க இதயதெய்வத்தின் ஒரே வாரிசு அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் வாழ்க நீதி கேட்டு கொங்கு மண்டலத்திற்குவருகை தரும்தாயே தெய்வமே என்று வாழ்த்து முழக்கங்களைமுழங்கினர்.

#### வாழ்த்து முழக்கம்

மக்களின் வாழ்த்து முழக்கங்களுக்கிடையே அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் இருகரம் கூப்பியவாறே விமான படிக்கட்டுகளில் இறங்கி வந்தார். கைகளை அசைத்தவண்ணம் மக்களின் வாழ்த்துக்களைப் பெற்றுக் கொண்டவாறே விமானத்திலிருந்து இறங்கினார்.

அன்னை ஜானகி எம். ஜி. ஆருடன் முன்னாள் அமைச்சர்கள் ப. உ. சண்முகம், கழக கொள்கைபரப்புச் செயலாளர் எஸ். முத்துசாமி மற்றும் சுலோசனா சம்பத் ஆகியோரும் வந்தனர்.

விமான நிலையத்தில் ஜேப்பியார், வலம்புரிஜான், எம். பி. ஜி. வரதராஜன் எம்.பி. திருப்பூர்மணிமாறன் லியாகத் அலிகான், நெகமம் கந்தசாமி, மா. சின்னராஜி, வளர்மதி, பொங்கலூர் கந்தசாமி ஆகியோர் மாலை கொடுத்து வரவேற்றனர்.

#### தாய்மார்கள் பேரார்வம்

பின்னர் விமான நிலைய சுற்று புறத்தில் திரண்டிருந்த மக்களின் வாழ்த்துக்களை பெற்றுக் கொண்டார்.

அன்னை ஜானகி எம். ஜி. ஆரை வரவேற்பதற்காக காலை 6 மணி முதலே திரளான தாய்மார்கள் கைகளில் குழந்தைகளுடன் வந்து காத்திருந்தனர்

அவர்கள் அன்னையைக் கண்டதும் மகிழ்ச்சிப்பெருக்கால் தங்களது குழந்தைகளை அன்னையிடம் கொடுத்து பெயர் சூட்டச் சொன்னார்.

[-ம் பக்கம் பார்க்க]

### வியப்பு-அதிசயம்

கோவை சிதம்பரம் பூங்காவில் அன்னை ஜானகி எம், ஜி. ஆர் பேசியகூட்டம்இதுவரை நடந்த மிகப்பெரிய கூட்டங்களில் தலையாயது இது என்று பத்திரிகை நிருபர்களே வியந்தனர்.

சமீபத்தில் எதிரணியினர் இதே பூங்காவில் ஜெயலலிதாவை அழைத்துப் பேசவைத்த கூட்டத்தைவிட அன்னையார் கூட்டம் பல மடங்கு பெரியது என்று பலரும் வியந்தனர் எதிரணியினர்கூட்டத்தில் பாதி பூங்கா கூட நிரம்பவில்லை என்றும். அன்னையார் கூட்டத்தில் சிதம்பரப்பூங்கா முற்றிலும் நிரம்பி வழிந்து சுற்றுப்புறங்களிலும் மக்கள் வெள்ளமாகக் காணப்பட்டதையும் கண்டு மூத்த பத்திரிகையாளர்கள்வியந்தனர்

∴ பிரபாகரன் தனிமனிதன் அல்ல; அவரை மத்திய அரசு அழைத்துப்பேசி முடிவு எடுக்க வேண்டும்- சண்டையை உடன் நிறுத்தவேண்டும்.

∴ பிரபாகரன் உயிருக்கு பாதுகாப்பு தரப்பட வேண்டும்.

## இலங்கை இந்திய ஒப்பந்தத்தில்

# மத்திய அரசு திசைமாறுகிறது

### அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். பேட்டி

(நமது சிறப்புச் செய்தியாளர் அ பொ நாராயணன்)

**கோவை, மார்ச் 27 விடுதலைப்புலிகளின் ஒப்பற்ற தளபதி பிரபாகரனின் உயிருக்கு மத்திய அரசு பாதுகாப்புத் தரவேண்டும் போரை நிறுத்த வேண்டும் இந்திய-இலங்கை ஒப்பந்தத்தில் மத்திய அரசு சற்று திசைமாறிச் செல்வதை மாற்றிக்கொள்ள வேண்டுமென கழகத்தலைவர் அன்னை ஜானகி எம் ஜி ஆர் வேண்டுகோள் விடுத்துள்ளார்.**

கழகத்தலைவர் ஜானகி எம்ஜிஆர் கோவையில் நிருபர்களுக்குப் பேட்டியளித்தார்.

நிருபர்கள் கேட்ட கேள்விகளும் அன்னையார் அளித்த பதில்களும் வருமாறு:-

கேள்வி தேர்தலில் தனித்து போட்டியிடப் போவதாக கூறினீர்களே இதில்ஏதேனும் மாறுதல் வருமா?

அன்னையார்:- தனித்துதான் போட்டியிடப் போகிறோம்

கேள்வி:- சமீபத்தில் டெல்லி சென்றீர்களே எம்ஜிஆருக்கான விருதைப் பெற்றுவிட்டு, விழாவில் பாதியிலேயே வந்து விட்டீர்களே?

#### புறக்கணிப்பு இல்லை

அன்னையார் அவருக்கு அளித்தஉயர்ந்த விருது அது வாங்கினேன் வந்தேன் அப்போதைய மன நிலையில் உடனே திரும்பிவிட்டேன் இதனால் விழாவை புறக்கணித்ததாகவோ வெளி நடப்பு செய்ததாகவோ கருதக்கூடாது. அப்படிப்பட்ட எண்ணமும் இல்லை.

கே:-சில இடங்களில் வருமான வரித்துறை அதிகாரிகள் சோதனை நடத்தியிருப்பது அரசியல்உள்நோக்கமா?

அன்னையார் அதிகாரிகள் கடமையைச் செய்திருக்கிறார்கள் இதனை ஏற்கனவே சொல்லி இருக்கிறேன்

கே: இலங்கை பிரச்சினையில் தற்போதைய நிலை குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

#### பிரபாகரன் தனி மனிதன் அல்ல

அன்னையார்: விடுதலைப் புலி தலைவர் பிரபாகரன் தனி மனிதன் அல்ல, அவர் உலகமெங்குமுள்ள மக்களின் ஒட்டுமொத்த உயிர் அவரை அழைத்துப் பேசி மத்திய அரசு நல்ல முடிவு காணவேண்டும். அங்கு நடைபெறும் சண்டையை நிறுத்த வேண்டும் பிரபாகரன் உயிருக்குப் பாதுகாப்புவேண்டும்.

இலங்கை ஒப்பந்தத்தில் மத்திய அரசு சற்று திசைமாறிச் செல்வதை மாற்றிக் கொள்ள வேண்டும்

கேள்வி:-எல் டி டி இ இயக்கத்தினர் உங்களைச் சந்தித்தார்களா?

அன்னையார்:- இல்லை,

#### இதயதெய்வம் காட்டிய பாதையில்

கே: தேர்தல் வாக்குறுதியில் முக்கியமாக என்னகுறிப்பிடப் போகிறீர்கள்?

அன்னையார்: இதய தெய்வம் புரட்சித்தலைவருடைய கொள்கைவழி முறை தான் முழுமையாகப் பின்பற்றப்படும். அவருடைய ஆட்சியை மீண்டும்அமைப்பதற்கு தான் நான் அரசியலுக்கே வந்தேன். அவருடைய கொள்கைகளை, ஆசைகளை நிறைவேற்றுவதுதான் என் குறிக்கோள்.

அவர் விட்டுச் சென்ற பணிகள் சின்னாபின்னமாகிவிடக் கூடாது என்பதை முக்கியமாகக் கொண்டுள்ளோம்.

கே: விரைவில் தேர்தல் வந்தால் உங்கள் அணி சந்திக்க தயாராக உள்ளதா?

அன்னையார்: தேர்தல் எப்போது வந்தாலும் சந்திக்கத் தயாராக இருக்கிறோம்.

இது வரை நான்கு மாவட்டங்களில் சுற்றுப் பயணம் செய்துள்ளேன் மக்களிடையே நல்ல வரவேற்பு உள்ளது

வரும் ஏப்ரல் 9ந் தேதி தர்மபுரியிலும், 11ந் தேதி வேலூரிலும் பேசவிருக்கிறேன். மாவட்ட தலைநகர் அனைத்திலும் நான் கலந்துகொள்ளும் கூட்டங்கள் நடத்தப்படவிருக்கிறது. அதன்பிறகு இரண்டாவது கட்ட சுற்றுப்பயணத்தை தொடங்குவேன்,

இவ்வாறு அன்னை ஜானகி எம்ஜிஆர் கூறினார்.

## வேலை நிறுத்தம் செய்ய தமிழக ஆசிரியர்கள் முடிவு

சென்னை, மார்ச் 27- தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி பொதுச் செயலாளர் க. ஈஸ்வரன் பொருளாளர் து.இளங்கோ ஆகியோர் நிருபர்களிடம் கூறியதாவது

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் செயற்குழு பொதுக்குழு கூட்டம் ராமேஸ்வரத்தில் இம்மாதம் 18,19,20 ஆகிய தேதிகளில் ஜே. எஸ். ராசு தலைமையில் நடைபெற்றது.

#### அடிப்படைசம்பளம்

மத்திய அரசு பள்ளி ஆசிரியர்களுக்கு இணையான ஊதியத்தை தமிழக ஆசிரியர் பெறும் வரை போராட்டம் நடத்த முடிவு எடுத்தது.

மத்திய அரசு ஆசிரியர்களுக்கு ரூபாய் 1200 அடிப்படை சம்பளம் தருகிறது. ஆனால் இங்கே ரூபாய் 610 தான் வழங்கப்படுகிறது.

தேசிய அளவில் கல்வி கொள்கை உருவாகும்போது சட்டோபாத்யாய கமிஷன் பரிந்துரை நடைமுறைப் படுத்தப்பட வேண்டும்.

இதற்கு 6கட்ட நடவடிக்கை எடுக்க முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

மத்திய அமைச்சர்களிடம் இதற்கான விண்ணப்பங்களை கொடுத்தோம்.

4-வது ஊதியர்குழு சட்டோபாத்யாயா கமிஷன் பரிந்துரைப்படி பள்ளி ஆசிரியர்களுக்கு வழங்கும் ஊதியம். போனஸ் மற்றும் சலுகைகளை மத்திய அரசு வழங்க வேண்டும்

இந்தக்கோரிக்கைகள்நிறைவேற்றப்படாவிடில் முதல் கட்ட போராட்டம் மே மாதத்தில் தொடங்கும்.

கோட்டை முன்பும் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகங்கள் முன்பும் மறியல் போராட்டம் நடைபெறும் இதில் 25 ஆயிரம் ஆசிரியர்கள் பங்கேற்பார்கள்

போராட்டத்தை தொடர வேண்டிய நிலை வந்தால் ஜூன் மாதத்தில் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது எனவும் முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

இதையொட்டி போராட்டக்குழு ஒன்றும் அமைக்கப் பட்டுள்ளது.

இவ்வாறு ஈஸ்வரன் இளங்கோ ஆகியோர் கூறினார்கள்.

## மத்திய பொதுப் பணித்துறை

செயற் பொறியாளர் சென்னை மத்திய சிவில் டிவிஷன் எண் IIமத்தியபொதுப் பணித்துறை சென்னை அவர்களால் தஞ்சாவூரிலுள்ள வட்டார (Refjonal) கல்ற்று பயிற்சி மற்றும் அபிவிருத்தி மையத்திற்கு சாலை வசதிகள் மற்றும் மதகுகள் அமைப்பதற்கான வேலைகளுக்கு அங்கீகரிக்கப்பட்ட தகுதி வாய்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து முத்திரையிட்ட இனவாரி டெண்டர்கள் 18-4-88 பிற்பகல் 3மணி வரை வரவேற்கப்பட்டு அதே தினம் பிற்பகல் 3-30 மணிக்கு திறக்கப்படும் உத்தேச செலவு தொகை ரூபாய் 2,31,364-டேவணி தொகை ரூபாய் 5784-00

டெண்டர் நிபந்தனைகள் மற்றும் படிவங்கள்ஆகியவை ஒவ்வொன்றும் ரூபாய் 100-வீதம் (திருப்பியளிக்கப்படமாட்டாது)செலுத்திஎழுத்து மூலமான விண்ணப்பத்தின் பேரில் 15-4-88 பிற்பகல் 4 மணி வரை பெற்றுக்கொள்ளலாம். விண்ணப்பத்துடன் a) சமீபத்திய வருமான வரி சர்டிபிகேட் b)பதிவு செய்ததற்கானசான்றிதழ் c)செயற்பொறியாளர் அவர்களிடம் இருந்து குறைந்தபட்சம் இது ரூ.2,5லட்சம்மதிப்பிற்கு போன்ற வேலைகளைதிருப்திகரமாக முடித்தற்சி சான்றிதழ் பெற்று அனுப்ப வேண்டும்.

davp-635-(1540)-87

## வரி விளம்பரம்

R.V.N. டிராவல்ஸ் வீடியோ கோச் RVN&Bros சென்னை தினசரி மாலை 5 மணிக்கு திருச்சி, மதுரை, விருதுநகர், சாத்தூர். கோவில்பட்டி, எட்டையபுரம் வழியாக தூத்துக்குடி டீலக்ஸ்வீடியோ கோச் பஸ் புறப்படும். எழும்பூர் ரெயில்வே ஸ்டேஷன் எதிரில் சென்னை.8 கிளை: வெல்கம் டிராவல்ஸ் தூத்துக்குடி.

போன் நெ. 560163

## மிலிடரி இஞ்ஜினீயர் சர்வீஸ்

கமாண்டர் ஒர்க்ஸ் இன்ஜினீயரி' பல்லவன் சாலை. சென்னை - 600 002 அவர்களால் கீழ்காணும் வேலைக்கான தனித்தனிவிண்ணப்பங்கள் உரிய வகுப்பைச்சார்ந்த அங்கீகரிக்கப்பட்ட காண்ட்ராக்டர்களிடமிருந்து 4 4 88 தேதிவரை வரவேற்கப்படுகின்றது வேலை விவரம். சென்னையிலுள்ள திருமண மான அதிகாரிகள்குடியிருப்பகளுக்கு வெளிப்புற குடிநீர சப்ளை மற்றும் வசதி செய்து கொடுத்தல் உத்தேச செலவு தொகைரூ6. 28லட்சம் காலம் ஆறு மாதங்கள் டேவணித் தொகைடெபாஸிட் ரூ9.500 இதர விவரங்களுக்கு 1988 மார்ச்23-ம்தேதியிட்ட இந்தியன்டிரேட் ஜர்னலைப்பார்க்கவும்.

davp-683 (3064)87

## ஆங்கில மேதை ஆகுங்கள்

தமிழ் தெரிந்தோர் ஆறு மாதங்களில் தமிழில் தபாலில் ஆங்கிலம்பயில சிறந்த பயிற்சி. B.A. M.A. படித்த பின்பும் ஆங்கிலத்தில் பேச முடியாமல் வருந்துவோரும் இதில் சேரலாம் பல்லாயிரம் பேர் பயனடையும் இப்பயிற்சியில் சேர 2-50 ஸ்டாம்புடன் எழுதுக.

தி அமெரிக்கன் இன்ஸ்டிட்யூட்

P. B. NO 16, எல்லீஸ் நகர், மதுரை-16.



'இதயதெய்வம் புரட்சித்தலைவர் சந்தனப் பேழையில் துயிலுமிடத்தை தூய்மைபடுத்திநினைவாலயம் ஆக்குக

# புதியவரலாறுபடைக்கும் சைக்கிள் பேரணி: அன்னை பார்க்கிறார்

## பேரணிப் பாதை - ஜேப்பியார் அறிவிப்பு

சென்னை ஏப் 27- இதயதெய்வம் நினைவிடத்தை சீர்படுத்தக் கோரிசென்னையில 50 ஆயிரம சைககிள்கள் பஙகேற்கும மாபெரும் சைக்கிள் பேரணி ஏப்ரல் 2ம் தேதி நடைபெறுகிறது

சிறப்பான இந்தப் பேரணியைக கழகத் தலைவர் அன்னை ஜானகி எம் ஜி ஆர் சைதை பகுதியில் அமைக்கப்பட்டுள்ள மேடையில் இருந்து பார்வையிடுகிறார்

சைக்கிள் பேரணியை ஆர்.எம் வீ: துவக்கி வைக்கிறார்.

இந்தப் பேரணிக்கு தலைமை வகித்து கழக துணைப்பொதுச்செயலாளர் டாக்டர் கா. காளிமுத்து சைக்கிள் ஓட்டி வருகிறார்.

கழக கொள்கைப் பரப்பு செயலாளர் எஸ். முத்துசாமி முன்னிலை வகிக்கிறார்.

சென்னை மாவட்டக் கழகச் செயலாளர் ஜேப்பியார் மற்றும் அனைத்துப்பகுதி கழக நிர்வாகிகளும் 150 வதுவட்டச்கழக,மன்ற, மகளிர், மாணவர் அணி, தொழிலாளர் அணி, இளைஞர் அணிகளைச் சேர்ந்த நிர்வாகிகள் மற்றும் கழகத் தோழர்கள் பங்கேற்று சென்னை நகரை குலுங்கிடச் செய்யவிருக்கின்றனர்.

50 ஆயிரத்திற்கும் மேற்பட்ட சைக்கிளில்தொண்டர்கள் கழகக் கொடியை ஏந்திய வண்ணம் வருகின்றனர்.

பேரறிஞர் அண்ணா இதயதெய்வம் புரட்சித்தலைவரின் திருவுருவப் படங்கள் ஒவ்வொரு சைக்கிளிலும் ஒட்டப் பெறுகிறது.

இந்த பிரம்மாண்டமான சைக்கிள் பேரணி கடற்கரை சாலையில் உள்ள இதயதெய்வத்தின் நினைவிடத்திலிருந்து ஏப்ரல் 2 ஆம் நாள் மாலை 2 மணி அளவில்புறப்படுகிறது.

பேரணி காமராஜர் சாலை, பாரதியார் சாலை, காயிதே மில்லத் சாலை, [திருவல்லிககேணி நெடுஞ்சாலை] வாலாஜா சாலை அண்ணா சிலை, அண்ணா சாலை வழியாக ஆளுநர் மாளிகையைச் சென்றடைகிறது.

ஆளுநர் மாளிகையில் கழகமுன்னணியினர் ஆளுநரைச் சந்தித்து இதயதெய்வம் துயிலும் இடத்தைத் தூய்மைப்படுத்தி நினைவாலயமாக்க வேண்டுமென்ற கோரிக்கைமனுவைக்கொடுக்கின்றனர்.

அந்தந்த தொகுதிகள். வட்டங்களிலிருந்து கழக அணிகள் சைக்கிள்களில் ஊர்வலமாகவே புறப்பட்டு பேரணி புறப்படும் இதய தெய்வம் புரட்சித்தலைவர் துயிலுமிடத்திற்கு பிற்பகல் ஒரு மணிக்குள் வந்து சேருமாறு மாவட்டக் கழகச் செயலாளர் ஜேப்பியார் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

# தமிழ்நாடுவிவசாயிகள் தொழிலாளர்கள் கட்சி முதல் மாநாடு

## ஆர் எம் வீ பங்கேற்பு

சென்னை, மார்ச். 27- தமிழ்நாடு விவசாயிகள, தொழிலாளர்கள்கட்சியின் முதலாவது அரசியல் பிரதிநிதிகள் மாநாடு சென்னை சைதாப்பேட்டையில் உள்ள தாடண்டர் நகர் சமூக கூடத்தில் இம்மாதம் 30 31 தேதிகளில நடக்கிறது

மாநாட்டில் ஆர் எம் வீ பங்கேற்று உரை நிகழ்த்துகிறார்

முதல்நாள் நிகழ்ச்சிக்கு (30ம் தேதி) தமிழ்நாடு பத்திரம் எழுத்தாளர் சங்கத்தலைவர் இரா.ஆறுமுகம்தலைமை தாங்குகிறார்.

கட்சியின் பொதுச் செயலாளர் பொன்குமார் துவக்க உரை நிகழ்த்துகிறார்.

தமிழ்நாடு விவசாயிகள், தொழிலாளர் கட்சியின் மாநிலத் தலைவர் இரா. குலசேகரன் விளக்க உரை ஆற்றுகிறார்.



31ம் தேதி நடைபெறும் நிகழ்ச்சிக்கு இரா குலசேகரன் தலைமை வகிக்கிறார்.

மாநாட்டில் அரசியல் நேற்று-இன்று-நாளை எதிர்கால வேலைத் திட்டம் போன்ற பல்வேறு தலைப்புகளில் விவாதம் நடக்கிறது.

மாநாட்டில் ஆர் எம் வீ தமிழக முன்னேற்ற முன்னணிக் கட்சியின் தலைவர் டாக்டர் சிவாஜி செயல் தலைவர் எம்.பி.சுப்பிரமணியம் இரா,செழியன்(ஜனதா) கி.வீரமணி (திராவிடர் கழகம்) மற்றும் ப.நெடுமாறன்: எம். ஆர். சிவசாமி பூவராகன், இரா. நக்கீரன், சைதை துரைசாமி ஆகியோர் பங்கேற்று உரையாற்றுகிறார்கள்.



# செய்தி | சில வரிகளில்....

### ஜப்பான் திரைப்பட விழாவில் 2 தமிழ்ப்படங்கள்

ஜப்பானில் ஏப்ரல் 15ந் தேதி தொடங்கி ஆறு மாதங்கள் நடக்கும் இந்திய திரைப்பட விழாவில் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட 25படங்கள் திரையிடப்படுகின்றன.

பாரதிராஜாவின் "முதல் மரியாதை" பாலுமகேந்திராவின் "மூன்றாம்பிறை" ஆகிய தமிழ்ப்படங்கள் இவ்விழாவில் திரையிடப்படுகின்றன.

### சென்னை போலீஸ்காரர் தற்கொலை

வ. உ. சி. மாவட்டம் வீரபாண்டியன் பட்டினத்தைச் சேர்ந்தவர் எத்தல்வின் ரோட்ரிகோ (வயது 26) இவருக்குத் திருமணமாகி ஆறு மாதமே ஆகிறது. மனைவி பெயர் தெரசிட்டா. பி. எஸ். சி. பட்டதாரியான தெரசிட்டா திருச்செந்தூரில் ஆசிரியராகப் பணியாற்றுகிறார்.

புதுமாப்பிள்ளையான ரோட்ரிகோ ஆவடியில் ஆயுதப்படை போலீஸ்காரராகப் பணியாற்றி வந்தார் அவர் தன்னைத் தானே சுட்டுக்கொண்டு இறந்தார். போலீசார் வழக்குப் பதிவு செய்து விசாரித்து வருகிறார்கள்.

### வைக்கம் போர்: விசேஷ தபால் முததிரை

புதுடெல்லி,மார்ச். 27- தீண்டாமையை எதிர்த்துகேரள மாநிலம் வைக்கத்தில் தீண்டாமை ஒழிப்புப் போராட்டம் 1924 ஆம் ஆண்டு நடத்தப்பட்டது போராட்டத்தை காந்திஜி நடத்தினார் பகுத்தறிவும் பகலவன் தந்தை பெரியார் இப் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைச் சென்றார்.

இப் போராட்டத்தின் நினைவாக இம் மாதம் 30 ஆம் தேதி விசேஷ தபால் முத்திரை வெளியிட அரசு தீர்மானித்துள்ளது இந்தக் கோவில்கள் திறந்த நிலையிலுள்ள ஓவியம் இந்த முத்திரையில் இருக்கும்.

### கலைவாணர் என.எஸ் கே. பிறந்த நாள்

சென்னையில்கலைவாணர் என். எஸ். கேயின் 80வதுபிறந்தநாள்விழா சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது தமிழக அரசும், தமிழ்நாடு இயல்-இசைநாடக மன்றம் இணைந்துவிழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தன.

ம.பொ.சி. தலைமை வகிக்க கவிஞர் கு.சா. கிருஷ்ணமூர்த்தி வி.எஸ் ராகவன் மற்றும் பலர் விழாவில் பங்கேற்றனர்.

### ஏபரல் 23ம் தேதி வாக்காளர் பட்டியல் வெளியீடு

வேலூர், மார்ச் 27- தமிழ்நாட்டில் திட்டமிட்டபடி வாக்காளர் பட்டியல் ஏப்ரல் இரண்டாம் தேதி வெளியிடப்படும் என்று ஆளுநரின் ஆலோசகர்சித்து வேலூரில் நிருபர்களிடம் தெரிவித்தார். வாக்காளர் பட்டியல் வேலைகள் முடியும் தருவாயில் இருக்கிறது என்றும் அவர் தெரிவித்தார்.

### ஈராக்கிற்கு ஐ நா கண்டனம

பொதுமக்கள் வசிக்கும் இடங்களின் மீது ரசாயன ஆயுதங்களை ஈராக் வீசியிருப்பதற்கு ஐ நா பொதுச் செயலாளர் கொய்யார் கண்டனம் தெரிவித்துள்ளார். இந்தப் படுமோசமான தாக்குதலால் ஈரானில் மட்டுமல்ல ஈராக்கிலும் பெருமளவு உயிர்ச்சேதம் ஏற்பட்டிருப்பதாகவும் அவர் கூறியுள்ளார்.

### ராணுவச்செலவை குறைப்பது ஆபத்து என்கிறார் ஆளுநர்

ராணுவச் செலவைக் குறைப்பது இந்தியாவுக்கு ஆபத்து என்று தமிழக ஆளுநர் அலெக்சாண்டர் சென்னையில் நடந்த விழா ஒன்றில் பேசும் போது கூறினார்.

இந்திய ராணுவச்செலவுக்காக மத்திய பட்ஜெட்டில் ரூ.13 ஆயிரம் கோடி ஒதுக்கப்பட்டிருப்பது நினைவிருக்கலாம்.

### முதல்வர் பதவி சிக்கல் என்கிறார் மூப்பனார்

'முதல்வர் பதவிஎன்பது சிக்கல் நிறைந்ததுஅதில் நான் மாட்டிக்கொள்ள விரும்பவில்லை எனக்கு முதல்வர் பதவியில் ஆசை இல்லை என்று சாத்தூரில் பேசிய தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் மூப்பனார் திடீர் என்று அறிவித்தார். வருங்கால முதல்வரே' என்று வாய் கிழியக்கத்தும் காங்கிரஸ்காரர்கள் மத்தியில் இதனால்குழப்பமும் கலக்கமும் ஏற்பட்டிருக்கிறது.

தேர்தலில்காங்கிரசுக்கு வெற்றி வாய்ப்பில்லை' என்பதை உணர்ந்து இப்படிப் பேசுவதாக அரசியல் வட்டாரங்களில் கூறப்படுகிறது

### சீக்கிய தீவிரவாதிகள் 11 பேர் கைது

சண்டிகர், மார்ச்.27- பஞ்சாபில் சீக்கிய தீவிரவாதிகள் 11 பேர் கைது செய்யப்பட்டனர் அவர்களிடமிருந்து ஏராளமான வெளிநாட்டு ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

### காஞ்சி சுவாமிகளுக்கு நேப்பாள மன்னர் பாத பூஜை

காட்மாண்டு, மார்ச்27- நேபாள மன்னர் பிரேந்திரா அவர் மனைவிராணி ஐஸ்வரிய தேவியுடன் சென்று காஞ்சி காமகோடிபீடம் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளைத் தரிசித்து பாத பூஜை செய்து ஆசி பெற்றார்.

### "வீட்டுக் கணக்கு" சிறு சேமிப்பு சிறப்புப் படம்

சிறு சேமிப்புப் பற்றி தமிழக அரசின் சிறு சேமிப்புத்துறை ரூபாய் 5லட்சம்செலவில்திரைப்படம் ஒன்றை தயாரித்துள்ளது இப்படத்திற்கு "வீட்டுக் கணக்கு" என்று பெயரிடப்பட்டுள்ளது.

20 நிமிடம் ஓடக்கூடிய இப்படம் 52 பிரிண்டுகள் எடுக்கப்பட்டு ஏப்ரல் முதல்தேதி முதல் தமிழகம் முழுதும் திரையிடப்படுகிறது.

வி.கே.ராமசாமி லூஸ் மோகன் ஒருவிரல் கிருஷ்ணாராவ் சாரலி, ஜெயங்கொண்டான் ஆகியோர் இப்படத்தில் நடித்து இருக்கிறார்கள்.

சிறு சேமிப்புத் துறை இயக்குனர் சம்பத்குமார் சென்னையில் நிருபர்களுக்கு இப்படத்தை திரையிட்டுக் காட்டினார். மக்கள் தொடர்பு அதிகாரிகள் சுபாஷ், அர்குமார மற்றும் பல அதிகாரிகள் படத்திற்கு வந்திருந்தனர்.

### வெளிநாட்டு பணமா? உழைப்பாளர் கட்சி மறுப்பு

தமிழகத்தைச் சேர்ந்த ஐந்து அமைப்புகள் தங்கள் கட்சிக்கு வெளிநாட்டில் நிதி வசூல் செய்ததாகமாநிலங்களவையில் மத்திய அமைச்சர்ஒருவர் இம்மாதம் 23ந்தேதி கூறியிருந்தார் அப்படி எந்த வசூலும் தங்கள் கட்சி செய்யவில்லை என்று உழைப்பாளர் முன்னேற்றக்கட்சித்தலைவர்இ,ர. நக்கீரன் மறுப்புச்செய்தி வெளியிட்டுள்ளார்,

### ஆர் வி-ராஜீவ் சந்திப்பு

குடியரசுத்தலைவர் ஆர் வெகட்ராமனை சனிக்கிழமையன்று (26ந் தேதி) பிரதமர் ராஜீவ் காந்தி சந்தித்துஒருமணி நேரம் பேசினார் அரசியல் சட்ட 59வதுதிருத்த மசோதாவிற்கு எதிர்கட்சிகள் இதுவரை இல்லாத அளவிற்குக் கடும் எதிர்ப்பு தெரிவிக்கும் நிலையில் நிகழ்ந்த இச் சந்திப்பு அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகக்

### ஆப்கன் பிரச்சினை: தடைநீங்கியது

ஆப்கானிஸ்தானில் ஓர் இடைக்கால அரசு ஏற்படுத்த வேண்டும் என்ற தனது கோரிக்கையைப் பாகிஸ்தான் வாபஸ் பெற்றுள்ளது. இதனால் ஆப்கானிஸ்தானத்தில் போர் நிறுத்தம் ஏற்படுவதில்நிலவிய பெருந்தடை நீங்கியதாக அமெரிக்கா கூறுகிறது ஆனால் இதுபற்றிஜெனிவாவில்பாகிஸ்தானுக்குப் ஆப்கனுக்கும் இடையில் நடைபெறும் பேச்சுவார்த்தைஇழுபறிநிலையில் இருப்பதாகக் கூறப்படுகிறது.



### நான்கு எதிர்க்கட்சிகள் இணைப்பு

ஜனதாஜன்மோர்ச்சா (மக்கள் பேரணி) லோக்தள கட்சியின் இருபிரிவுகள் பகுகுணா பிரிவு சரண்சிங் மகன்அஜித்சிங் பிரிவு எஸ் காங்கிரஸ் ஆகியவை விரைவில் இணையக்கூடிய நிலை உருவாகியுள்ளது புதிய கட்சிக்கு தேசீய மக்கள் கட்சி என்று பெயரிடப்படும்.

பெயர், கொடி சின்னம் ஆகியவற்றில் உடன்பாடு ஏற்பட்டுவிட்டது என்றும் இணைப்பு நிச்சயம் நடக்கும் என்றும் ஹெக்டே நம்பிக்கை தெரிவித்துள்ளார்.

ஏப்ரல் 2 சனிக்கிழமை

**50 ஆயிரம் சைக்கிள் பேரணி - அன்னை காண்கிறார் - அன்னையை தரிசிக்க ஆர்ப்பரித்து வா! அலை அலையாய் வா வா!**

○ ஜனநாயகத்தில் கட்சித் தலைமைக்கு, ஆட்சித் தலைமைக்கு போட்டி வரலாம்-ஆனால் பெரும்பான்மைக்குக் கட்டுப்படுவது ஜனநாயகம் கற்றுத் தந்திருக்கிற பாலபாடம்

○ ஆனால் நடந்தது என்ன? 33 பேரை வைத்துக்கொண்டு இன்னும் 2 ஆண்டு காலம் நடந்திருக்க வேண்டிய புரட்சித்தலைவர் ஆட்சியைக் கலைத்த துரோகத்தை மக்கள் தெளிவாகவே அறிந்து வைத்திருக்கிறார்கள்

○ இந்தியாவை ஆள்கிறவர்கள்- அரசியல் தந்திரத்திற்கு-அரசியல் சூதாட்டத்திற்கு-சாணக்கியத்தனத்திற்கு என்னைப் பயன்படுத்திக்கொண்டார்களே என்ற வேதனை மறக்க முடியாதது; புரட்சித்தலைவரின் ஆட்சி மீண்டும் அமையப்போகிறது

## அதைத் தடுக்கும் சக்தி யாருக்கும் இல்லை

# துரோகம்-வஞ்சகத்திற்கு பாடம் கற்பிப்போம்

குமுதம்

## அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். வீர சபதம்

**சென்னை, மார்ச், 27- புரட்சித்தலைவரின் ஆட்சி மீண்டும் அமையப் போவதை தடுக்கிற சக்தி யாருக்கும் இல்லை. மக்கள் நம் பக்கம் இருக்கிறார்கள் வரவிருக்கிற தேர்தலில் மாபெரும் வெற்றியைப் பெறுவோம் துரோகக் கூட்டத்திற்கும், வஞ்சகக் கூட்டத்திற்கும் பாடம் கற்பிப்போம் என்று ''குமுதம்'' வார இதழில் எழுதியுள்ள கட்டுரையில் அன்னை ஜானகி எம் ஜி. ஆர். சூளுரைத்துள்ளார்.**

ராமாவரம் தோட்டத்தின் மண்ணை, இன்றைக்குக் கோடானு கோடி மக்கள்-குறிப்பாகக் கழகத் தொண்டர்கள் வந்து வணங்கிவிட்டுச் செல்கிறார்களே அந்த மண்ணை மிதிக்க மாட்டோம் என்று மறுத்தவர்கள் தான் இன்றைக்கு என் மீது பழி சுமத்திவிட்டு கட்சியைப் பிளந்து ஆட்சி அழிவதற்குக் காரணமாகவும் இருந்து புரட்சித் தலைவருடைய புகழுக்கே களங்கம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

### ஜனநாயகம் கற்றுத்தரும் பாடம் என்ன?

ஒரு ஆட்சியை நடத்துகிற கட்சியில் யார் தலைவராக வருவது என்பதிலே கருத்து மாறுபாடு வரலாம்: அதில் தவறில்லை' அப்படிக் கருத்து மாறுபாடுகள் தவிர்க்கப்படாத சூழ்நிலையில் போட்டியும் வரலாம். அதையும் ஏற்றுக் கொள்ளலாம். அப்படி போட்டி ஏற்பட்டபிறகு, பெரும்பான்மையினர் யாரை ஆதரிக்கிறார்களோ அவருடையதலைமையை ஏற்றுக் கொண்டு அதற்குக் கட்டுப்பட்டு நடப்பது தானே ஜனநாயகம் கற்றுத் தந்திருக்கிற பாலபாடம்.

### இன்றையநிலைக்கு யார் காரணம்?

தவிர்க்கமுடியாது போட்டி ஏற்பட்டு 98 பேர் என்னை ஆதரித்ததற்குப்பிறகு இந்த ஜனநாயகத்தத்துவத்தையாவது இவர்கள் ஏற்றுக்கொண்டு ஒன்றாக இருந்திருக்கலாம் அதையும் ஏற்றுக் கொள்ளாமல் துரோக உள்ளத்தோடு 33 பேரை வைத்துக்கொண்டு இந்த ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு கங்கணம் கட்டிக் கொண்டு நடத்திய துரோகச் செயல்களை எல்லாம் நாட்டுமக்கள்தெளிவாகத்தெரிந்திருக்கிறார்கள்ஆகவே தான் இன்னும் இரண்டு ஆண்டு காலம் நடைபெற வேண்டிய புரட்சித் தலைவருடைய அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய ஆட்சி திட்டமிட்டுக்கவிழ்க்கப்பட்டு தேர்தல்நடத்துவதற்கான சூழ்நிலைக்கு ஆட்படுத்தப்பட்டிருக்கிறது.

தவிர்க்க முடியாத சூழ்நிலையில் சட்டமன்றக் கட்சியின் தலைவராக நான் தேர்ந்தெடுக்கப்பட்டு சட்டப்படி ஆளுநரால் அழைக்கப்பட்டு ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக்கொண்ட பிறகு முறைப்படி இந்தியப் பிரதமர் அவர்களையும் காங்கிரஸ் கட்சியின் முக்கியத் தலைவர்களையும் சந்தித்து அவர்களுடைய ஆதரவையும் வாழ்த்துக்களையும் பெறுவதற்காக டெல்லி சென்றேன்.

### அன்றைக்கே சொல்லி இருந்தால்...!

அன்றைக்கு எந்தத் தலைவரும் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி உட்பட நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முறை சரியல்ல இது சட்ட விரோதமானது ஆளுநர் உங்களை அரசு அமைக்க அழைத்திருக்கக் கூடாது இதை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை அளுகிற காங்கிரஸ் கட்சியும் ஏற்றுக்கொள்ளவில்லை ஆகவே உங்களை நாங்கள் இனிமேல் ஆதரிக்க முடியாது தோழமைக் கட்சி என்ற உறவு புரட்சித்தலைவர் மறைவோடு அறுந்துவிட்டது என்றுசொல்லியிருப்பார்களேயானால் இப்படிப்பட்ட துரோகச் சூழ்நிலையில் காங்கிரஸ் கட்சியினுடைய ஆதரவும் இல்லாமல் ஒரு நிமிடம் கூட நான் ஆட்சிப் பொறுப்பில் இருந்திருக்க மாட்டேன்.

அன்றைக்கே ராஜினாமா செய்து விட்டு புரட்சித் தலைவரின் அரசைத் தமிழகமக்கள் மீண்டும் அமைக்கப் போகிறார்களா; இல்லையா என்ற கேள்வியை மக்கள் மன்றத்தின் முன்னாலே வைத்து ஜனநாயக வழியில் கேட்டிருப்போம்

### அரசியல்தந்திரம்-சாணக்கியம் சூதாட்டம்

ஆனால் நேரில் சந்தித்தபோது அந்த மாபெரும் தலைவர்கள் எனக்கு நம்பிக்கைதரும் வகையில் நடந்துவிட்டு; பேசிவிட்டு அவர்களுடைய அரசியல் தந்திரத்திற்கு அரசியல் சாணக்கியத்திற்கு புரட்சித் தலைவரின் ஆட்சியை எப்படி எந்தநோத்தில் கவிழ்க்கலாம் என்கிற அரசியல் சூதாட்டத்திற்கு என்னைப் பயன்படுத்திக் கொண்டார்களே என்பதைத் தான் நான் இப்போதும் எண்ணி எண்ணி வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்

'மைனாரிட்டி அரசு' என்று குற்றம் சொல்லுகிற இந்தக் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் அன்றைக்கு இதையே தெளிவாகச் சொல்லியிருந்தால்-எங்களுடன் தோழமை உணர்வோடு போட்டியிட்டு எங்களுடைய வாக்குகளையும் பெற்று சட்டமன்றத்திலே இடம் பெற்ற காங்கிரஸ் கட்சி, அந்தத் துரோகக் கூட்டத்தோடு சேர்ந்து எதிர்க்கிறது என்ற உண்மையை வெளிப்படுத்துவதற்காக இந்தத் துரோகத்தையும் வஞ்சகத்தையும் நாட்டிற்கு எடுத்துக்காட்ட சுயமரியாதையோடு ஆட்சியைத் தூக்கி எறிந்துவிட்டு வெளியே வந்திருப்போம்.

### வீரமும்-மானமும் மிகுந்த கழகம்

ஏனெனில், புரட்சித்தலைவரின் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்பது வீரமும், மானமும் மிகுந்த கட்சியாகும். அதைக் காப்பதற்காகப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிற நான் புரட்சித்தலைவரின் பாதியாக வாழ்ந்து அவரிடமிருந்து பாடத்தை மட்டுமல்ல அவருடைய வீரத்தையும் துணிவையும் மான உணர்வையும் பெற்றுக்கொண்டிருக்கிற அவரது வாழ்க்கைத் துணைவியாகிய நான் மதியாதார தலைவாசல் மிதித்தொருகால் சென்று மிதியாமை கோடிபெறும்' என்கிற தமிழ் வழக்கிற்கேற்ப அந்த நயவஞ்சகத்தை துரோகத்தை நாடறியச்செய்யும் முயற்சியில் அன்றைக்கே இறங்கியிருப்பேன்.

ஆனால் புரட்சித்தலைவர் இருந்தவரை தங்களால் ஆட்சியைப் பிடிக்க முடியாது என்றிருந்த காங்கிரஸ்காரர்கள் அவரது பக்கத்திலேயே இருந்த துரோக சிந்தை படைத்தவர்களுடன் கை கோர்த்து ஆட்சியைக் கலைத்து விட்டார்கள்.

### நூதனமுறை ஆட்சி

மக்களுடைய வாக்குகளைப் பெறாமலே ஒரு கட்சியின் ஆட்சியை நடத்த முடியும் என்பதற்கு உள்ள ஒரு நூதன முறைதான் குடியரசுத் தலைவர் ஆட்சி முறை என்பதை நீண்ட காலமாகக் காங்கிரஸ் கட்சி நிரூபித்துக் கொண்டிருக்கிறது புரட்சித் தலைவர் காலத்தில் 1980 ஆம் ஆண்டில் காங்கிரஸ் அப்போதும் இப்படிப்பட்ட ஆட்சியைப் பிடிக்கும் பேராசை முயற்சியில் ஈடுபட்டு மிகப்பெரிய தோல்வியைச் சந்தித்தது ஆனால் ஏழு ஆண்டுகாலம் ஆகிவிட்டதால் அதை மறந்து விட்டார்களோ.... அல்லது... புரட்சித் தலைவர் இல்லை; இதுதான் சரியான சமயம் என்று திட்டமிட்டார்களோ தெரியவில்லை... மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சியைக் கலைத்து காங்கிரஸ் கட்சியின் ஆட்சியை இன்றைக்குக் குடியரசுத் தலைவர் ஆட்சி என்ற பெயராலே நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

### நன்றிக்காகவே விருதை ஏற்றேன்

புரட்சித்தலைவர் 10 ஆண்டுக்காலம் தமிழகத்தில் நடத்திய ஆட்சியை யாரும் குறைகூற முடியாததால்தான் காங்கிரஸ் தலைவர்களே பாராட்டினார்கள். அவருடைய மனிதாபிமானத்திற்கும் தேசிய உணர்விற்கும் தேசிய ஒற்றுமைக்காக எடுத்த நடவடிக்கைகளுக்கும் இவை எல்லாவற்றையும்விட ஏழை எளிய மக்களின் நலனில் காட்டிய அன்புள்ளத்திற்கும். அதன் அடிப்படையில் நடத்திய ஆட்சியின் சிறப்பிற்கும் பாராட்டி, அவர் இறந்ததற்குப் பிறகு ''பாரதரத்னா'' விருதைக்காங்கிரஸ் ஆட்சி வழங்கியது. கனத்த இதயத்தோடு சிந்துகின்ற கண்ணீரோடு அவருக்குக் கொடுத்த சிறப்பை நாம் நன்றியுடன் பாராட்ட வேண்டுமே என்ற உணர்வோடு அதையும் நான் பெற்றுக்கொண்டேன்

ஆனால் ''பாரத ரத்னா'' பட்டத்தைக் கொடுத்தவர்கள் அடுத்த கணத்திலேயே அவருடைய ஆட்சியை விமர்சிக்கவும் வருகிறார்கள் நாடாளுமன்றத்தில் நிழல் - வரவு - செலவுத் திட்டத்தை வெளியிடுகிற மத்திய நிதியமைச்சர் 'புரட்சித் தலைவர் நிறைவேற்றிய திட்டங்கள் தொடரும்... ஏழை எளிய மக்களுக்கான நல்வாழ்வுத் திட்டங்கள் கைவிடப்படமாட்டாது. என்று சொல்லி விட்டு அப்படியே புரட்சித்தலைவர் ஆட்சி நிறைவேற்றிய திட்டங்களையே புதியன போன்று அறிவித்துப் பேசிய அடுத்த கணமே அவர்களுடைய அமைச்சரவையில் இருக்கின்ற தமிழகத்தைச் சேர்ந்த அமைச்சர் ப. சிதம்பரம் அவர்கள் 'புரட்சித்தலைவருடைய ஆட்சிக் காலம்' இருண்ட ஆட்சிக் காலம்' என்று விமர்சிக்கிறார்.

### அவதூறு பொழிவதா?

இவை எல்லாவற்றையும் விட 23நாட்களே நடைபெற்ற ஆட்சிக்காலத்தில் நான் ஏதோ முறைகேடுகளை நடத்தியதைப்போல ஆதாரமின்றி அவதூறுகளை அள்ளிப்பொழிகிறார் ஏதாவது குற்றங்கள் நிகழ்ந்திருந்தால் தவறுகள் நிகழ்ந்திருந்தால் அதைச் சான்றோடு எடுத்துக்காட்டினரல் அந்தப்பெரிய மனிதர்கள் நியாய புத்தி படைத்தவர்கள் ஜன நாயகத்தை மதிக்கிறவர்கள் என்பதை இந்த நாடு புரிந்து கொள்ளும்.

ஆனால் புரட்சித்தலைவருடைய வீழ்த்த முடியாத ஆட்சியை கட்சியை அவர் மறைந்ததற்குப்பிறகு பிறகு வீழ்த்துவதற்கு திட்டம் போட்டு காரியம் ஆற்றிக்கொண்டிருக்கிற இவர்கள் எப்படிப்பட்ட இரட்டை வேடம் போட்டு நடித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் வேதனையோடு சொல்லாமல் இருக்க முடியவில்லை.

இன்றைக்கு 10 ஆண்டுக்காலம் தமிழக ஆட்சியில் ஏழை எளிய மக்கள் பெற்ற பலனை இல்லை என்று இவர்கள் தயவுசெய்து எடுத்துச்சொல்லட்டும் எங்கேயோ மிகக்குறைந்த தொகையில் ஏழை எளிய மக்களின்மீது ஏறிச்சவாரி செய்கிற பெரு முதலாளிகள் அல்லது அவர்களுக்கு ஆதரவாக இருக்கின்ற சில நடுத்தர வர்க்கத்தினர் இவர்கள் தான் சமுதாயத்தில் வாழுகின்ற மக்கள் சமுதாயம் அனைத்திற்கும் பிரதிநிதிகள் என்று எண்ணிக் கொண்டு வளர்ச்சியில்லை வளர்ச்சியில்லை, என்று பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

### புரட்சித்தலைவரின் பொற்காலம்

பத்து ஆண்டுக்காலம் மக்களின் அடிப்படைத் தேவையான அரிசியின் விலை உயராமல் நிலை நிறுத்துகிற ஒரு பொருளாதாரத்திட்டத்தைப் புரட்சித் தலைவரின் ஆட்சியில்தானே பார்க்க முடிந்தது வறட்சி வந்தாலும், புயல் வெள்ளத்தாலே பஞ்சம் ஏற்பட்டாலும் கிராமப்புறத்து மக்கள் வயிறார உண்ணுகிற காட்சியை இந்தப் புரட்சித்தலைவரின் காலத்திலேதானே பார்க்க முடிந்தது.

### புதிய நம்பிக்கை

நாள்தோறும் ராமாவரம் தோட்டத்திற்கு வந்து செல்லும் நூற்றுக்கணக்கான தாய்மார்களை- சகோதரிகளை கிராமப்புறத்து மக்களை எல்லாம் பார்க்கிற பொழுதும் தமிழகத்தில் செல்லுகிற இடங்களில் எல்லாம் லட்சக் கணக்கில் கூடுகிற தாய்மார்களையும் பெரியவர்களையும் பார்க்கிற பொழுதும் எனக்கு ஒரு புதிய நம்பிக்கை ஏற்படுகிறது.

''புரட்சித்தலைவரின் ஆட்சி அமையப் போகிறது...அதைத் தடுக்கிற சக்தி யாருக்கும் இல்லை'' என்கிற உறுதி ஏற்படுகிறது இந்த உறுதியும் நம்பிக்கையும் என்னுடைய ஆற்றலால் எனக்குள்ள சிறப்பால் ஏற்படுகிறது என்று நான் எண்ணவில்லை

உலகம் போற்றும் சத்துணவுத் திட்டத்தை நிபுணர்கள் என்பவர்களெல்லாம் எதிர்த்தபோதும், அன்றைக்கு நடைமுறைப்படுத்தி ஆண்டுக்கு 200 கோடி ரூபாய் திட்டத்தில் செயல்படுத்தினார்கள். ஏழை; எளிய மக்களின் நல்வாழ்விற்காக அவர் அறிமுகப்படுத்திய எந்தத் திட்டத்தை இன்றைக்கு இவர்கள் கைவிட்டுவிட முடிகிறது...?

### வாய் புளித்ததோ... மாங்காய் புளித்ததோ...!

'வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ' என்று சமுதாயத்தில் உயர்ந்த இடத்தில் இருக்கிறவர்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் இருந்து கொண்டு சமுதாயம் முழுவதையும் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறவர்கள் சமுதாய மக்களுடைய உழைப்பு.... அதனால் வருகிறசெல்வம்.. அந்தப் பலன் அனைத்தும் தங்களுக்கே சேரவேண்டும் என்று எண்ணுகிறவர்கள் இன்றைக்குத் தத்துவங்களைப் பேசிக் கொண்டிருக்கிறார்களே தவிர 10 ஆண்டுக் கால புரட்சித்தலைவரின் ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்கிறார்களா இல்லையா என்பதை நான் பட்டியல் போட்டுக் காட்ட முடியும் ஆனால் குமுதத்தில் அதிக பக்கங்களை ஒதுக்காமல் கட்டுப்படுத்துகிறார்கள் அதனால் நான் விட்டுவிடுகிறேன்.

'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்பது போல புரட்சித்தலைவருடைய வாழ்க்கைத் துணைவியாக 40ஆண்டு காலம் இருந்து பாடுபட்டவள் இவள்; ஒரு குடும்பத்தலைவி அன்புள்ளம் கொண்ட தாய் தமிழ்ப்பண்புள்ளம் கொண்ட பெண் இவளிடத்தில் எவ்வளவு ஆற்றல் இருக்கிறது? திறமை இருக்கிறது?என்பதைவிட புரட்சித்தலைவருடைய பொன்மனமும் அவரிடத்திலே இருந்த தாய்மைப் பண்பும் ஏழை எளியவர்களை அரவணைத்துச்செல்லும் ஈகைக்குணமும் இவை எல்லாவற்றையும் செயல்படுத்துவதற்குரிய நெஞ்சுறுதியும் கொண்ட ஒரு தாயாக புரட்சித்தலைவருடைய சரிபாதியான வாழ்க்கைத்துணைவியாக இவற்றிற்கெல்லாம் மேலாக கழக கண்மணிகளுக்கு அன்பு காட்டும் அன்னையாக என்னைப்பார்க்கிறார்கள் நம்புகிறார்கள்.

### உங்கள் ஆதரவும் நம்பிக்கையுமே ஆதாரம்

அந்த நம்பிக்கையைத் தருகிற நம்முடைய இதய தெய்வம் புரட்சித்தலைவர் அந்த நம்பிக்கையை வெற்றிபெற வைப்பதற்கு எனக்கு வேண்டிய எல்லா சக்தியையும் தோன்றாத் துணைவராக இருந்து வழங்கிக்கொண்டு வருகிறார் அதற்கு உறுதுணையாக அவர் உருவாக்கி வளர்த்த நன்றியுள்ள கழக முன்னணித்தலைவர்களும் அவருடைய ரத்தத்தின் ரத்தமான லட்சோப லட்சம் கழக உடன்பிறப்புக்களும் அவரை 'எங்கள் வீட்டுப்பிள்ளை' என்று கொண்டாடுகிற தாய்மார்களும் தமிழ் மக்களும் ஆதரவாக இருக்கிறார்கள் அந்த நம்பிக்கையில் வருகிற தேர்தலைச் சந்தித்து மாபெரும் வெற்றியைப் பெறுவோம்-துரோகக் கூட்டத்திற்கும், வஞ்சகக் கூட்டத்திற்கும் பாடம் கற்பிப்போம் புரட்சித்தலைவர் அமைத்த அண்ணாவின் அரசை மீண்டும் அமைப்போம் என்ற உறுதியோடு

அண்ணா நாமம் வாழ்க! புரட்சித்தலைவரின் புகழ் ஓங்குக! என்று கூறி முடிக்கிறேன்.

'குமுதம், ஏட்டில் அன்னையார் இவ்வாறு எழுதியுள்ளார்

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029

# டாக்டர் கா.காளிமுத்து புரட்சி மலர்கள்

## நீதி எங்கள் பக்கம்!

**அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்-1972- இல் புரட்சித்தலைவரால் தோற்றுவிக்கப்பட்டு அவரது அயராத உழைப்பாலும் கடமை தவறாப் பண்பாலும் இலட்சக்கணக்கான தூயதொண்டர்களின் தீரத்தாலும் தியாகத்தாலும் உருவான பேரமைப்பு!**

உருவான காலம் 1972!

அப்போது ஜெயலலிதா என்ன செய்தார்? எங்கிருந்தார்? அவரது உழைப்பும் பிழைப்பும் எப்படிப்பட்டது என்ற அருவருப்பான நடைமுறைகளை ஆராயத தேவையில்லை!

அது அவருடைய 'பெருமைக்குரிய' தனி வாழ்க்கை!

அனைத்திந்திய அண்ணா திமுகழக வளர்ச்சிகண்டு பொது நோக்கோடோ சுயநல இலாப எண்ணத்தோடோ பலர் காலப்போக்கில் வந்து சேர்ந்தனர்!

ஆனால் கட்சியில் ஜெயலலிதா சேர்ந்தவுடனே புரட்சித்தலைவர் சில பொதுக்கூட்டங்களைத தலைமைக்கழகச் செலவில் ஏற்பாடு செய்து ஜெயலலிதாவுக்கு உற்சாகம் ஊட்டினார்!

**அந்த உற்சாகம்தான்- ஊரையே விழுங்கும் உற்சாகமாயிற்று! அற்பமனமும்-அகப்பட்டதைச் சுருட்டும் புத்தியும் -ஆண்களையெல்லாம் சுருட்டி அடிக்கிற அழகு தன்னிடத்தில் இருக்கிறது என்ற தவறான எண்ணமும்- அவரைத் தான்தோன்றித்தனமாக நடக்கவும், தடித்தவார்த்தைகளை நாக் கூசாமல் பயன்படுத்தவும் ஆளாக்கிவிட்டது!**

புரட்சித் தலைவர் அவருடைய இயல்புக்கேற்ப கண்டித்தார்! கருணையும் காட்டினார்! திருத்தவே முடியாத தீமையிலும் தீமை என்பது புரிந்தவுடன் கட்சிக்காரர்கள் தொடர்பு கொள்ளக் கூடாது என்று கடுமையான கட்டளையையும் இட்டார். தொலைபேசி இணைப்பு வேண்டாமென்றார்!

அவர் ஆவி திடீரென்று முடிந்திராவிட்டால் ஜெயலலிதா எனும் அரசியல் சாக்கடையை அகற்றி நாட்டையே சுத்தமாக்கி விட்டுப் போயிருப்பார்! ஆனால் அந்தச் சாக்கடை தன்னைப் பன்னீர் நதியென்கிறது!

புரட்சித்தலைவர் - அண்ணா தி. மு. கழகத்தைத் தொடங்கியவுடன் திமுக சொத்தில் எதுவும் பங்கு கேட்கவில்லை. தனியாகவே இயக்கத்தை நடத்தினார்.

அன்னை ஜானகி எம் ஜி ஆருக்குச் சொந்தமான கட்டிடத்தில்கழகம் இயங்கத் தொடங்கியது தன்னையே மூலப்பொருளாக்கி உலகின் பழம்பெரும் தொழிலில் ஈடுபட்ட பாவிகளுக்கு அப்போது தலைமைக்கழகம் இருக்கும் இடம் கூடத் தெரியாது.

புரட்சித்தலைவரின் தலையிலேயே கைவைக்கும் இந்தப் 'பத்மாசூரி' இப்போது எல்லாம் எமக்கே என்கிறார், அவரது அறிக்கையின் வாசகங்களை அப்படியே தருகிறேன்.

"நேற்று முன்தினம் பத்திரிகையாளர்கள் கேள்விகளைத் தொடுத்தபோது திருமதி ஜானகி சில முத்துக்களை உதிர்த்திருக்கிறார்கள் பதில்கள் என்ற வடிவில்"

திமிர் தெரிகிறதா! கேலி புரிகிறதா!

அன்னை ஜானகிஎம்ஜிஆர் - நிருபர்கள் கேள்விகளுக்குத்தரும் பதிலை - முத்துகளை உதிர்ப்பதாக இந்த மோகனாங்கி- சரசவல்லி சிங்காரி-கைகாரி-எவரும் சீந்தாத ஒய்யாரி-வககணை பேசுகிறார்!

நிருபர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் தகுதி-பொதுவாழ்வுககே பிறந்து- பொதுவாழ்வுக்கே அர்ப்பணித்து விட்ட- இந்தச் சந்தைப் பொருளுக்குத் தான் சாசுவதமாம்!

ஜானகி அன்னை - நிருபர்களுக்குப் பதில்சொல்வதே பாவமாம்!

அரை கோடி ரூபாய் பெறுமானமுள்ள அந்தக் கட்டிடமே என் அன்னை கட்சிக்குத் தானமாக எழுதிக் கொடுத்தது

புரட்சித்தலைவர் மறைந்தபின்னும் கட்சி அங்கே தான் இயங்கியது. அடுத்தவர் பொருளிலேயே வாழ்க்கை நடத்திப் பழக்கப்பட்ட ஜெயலலிதா அதைக் கைப்பற்றக் கருதுவது என்ன நியாயம்?

கடலுக்கு மூடிபோட்டு மறைத்துவிட முடியாது!

உண்மைக்குச் சிறைவைக்க முடியாது" என்று உவமை வேறு பொழிகிறார் உல்லாசப் பைங்கிளி!

**கடலே எங்களுக்குச் சொந்தம் எனும்போது! மூடிபோட்டு மறைக்க நாங்கள் ஏன் முயலவேண்டும்? நாறிய குட்டைகளுக்குத் தானே மூடி தேவை?**

உண்மை சிறை நீங்கிவிட்டது என்பது தானே நீதிமன்றத் தீர்ப்பு!

**இந்தத் தீர்ப்பு வரும் வரை என்தாய் எவ்வளவு பொறுமை காட்டினார்! நிதானம் காட்டினார்!**

நீலியே - அன்னையின் பாத தூசுக்குக் கூடச் சமமற்ற பாதகியே ஏன் கொதிக்கிறாய்?

தலைமைக் கழகம் - என்ன சந்தியா சொத்தா? மைனர்கள் கூட்டணியில் உனக்கு வழங்கிய மான்யமா? கட்சிக்குச் சொந்தம்!

இராமாவரம் தோட்டமோ- தி. நகர் அலுவலகமோ- லாயிட்ஸ் ரோடு அலுவலகமோ- அன்னை ஜானகி எம் ஜி ஆரின் தலைமையிலுள்ள இயக்கத்துக்கும்- என் தாய்க்கும் சொந்தம்.

**புரட்சித்தலைவர் தீட்டிய உயில்படி எல்லாம் நடக்கும்.**

**நீ என்ன சட்ட ஆலோசனை கூறுவது? உனக்கெதற்கு இதிலே தலையை நுழைக்கும் தகாத வேலை?**

**நீதி எங்கள் பக்கம்!**
**உண்மை எங்கள் பக்கம்!**
**மக்கள் எங்கள் பக்கம்!**

**அப்பீலுக்கு நீ போ - அல்லது ஐ. நா. சபைக்கே போ! எங்கும் நீதியே வெல்லும்! வீணாக ஆத்திரத்தை மூட்டினால் - போயஸ் கார்டன் தப்பிக்காது.**

# ரூ. 300 கோடி செலவில் சென்னையை அழகுபடுத்த புரட்சித்தலைவர் தந்த திட்டம்

புதுடெல்லி. மார்ச் 27- சென்னை நகரை அழகு படுத்த ரூபாய் 300 கோடி ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று இதய தெய்வம் புரட்சித் தலைவர் கூறியிருந்தார். புரட்சித் தலைவரின் இந்த திட்டத்தை செயல் படுத்துவது குறித்துமத்திய அரசு இப்போது பரிசீலித்து வருகிறது.

மாநிலங்களவையில் கழக உறுப்பினர் நாஞ்சில் வின்சென்ட் இதுபற்றி கேள்வி எழுப்பினார்.

இதற்கு மத்திய அமைச்சர் தல்பீர்சிங் பதில் அளித்து பேசும்போதுகூறியதாவது:-

சென்னை நகரில் அருமையான கடற்கரை இருக்கிறது. அந்த கடற்கரைப்பகுதி உட்பட சென்னை நகரை அழகு படுத்த வேண்டும் என்று மறைந்த எம்ஜிஆர் அவர்கள் கோரிக்கை விடுத்திருந்தார்.

இந்த திட்டத்திற்கு 300 கோடி ரூபாய் வரை செலவாகும். அவர்களின் இந்த திட்டத்தை நிறைவேற்றுவது குறித்து மத்திய அரசு பரிசீலித்து வருகிறது, என்று கூறினார்.

டாக்டர் சிவாஜியின்

## த. மு. மு. அலுவலக திறப்பு விழா

சென்னை மார்ச் 27- தமிழக முன்னேற்ற முன்னணியின் தலைமை அலுவலகத்தை அக்கட்சியின் தலைவர் டாக்டர் சிவாஜிகணேசன் இன்று [ஞாயிறு] காலை திறந்து வைத்தார்.

தியாகராயநகர் வடக்கு உஸ்மான்சாலையில் கட்சியின் தலைமை அலுவலகம் அமைந்துள்ளது. திறப்பு விழாவில் கட்சியின் நிர்வாகிகளும் முன்னணியினரும் கலந்து கொண்டனர்.

புதிய கட்சி துவக்க வேண்டியநிலைஏற்பட்டதை விளக்கி சிவாஜி உரையாற்றினார் பொதுச் செயலாளர் ராஜசேகரன் நன்றி கூறினார்.

## பால்வளத் தலைவராக கழகத்தவர்தேர்வு

ஆத்தூர், மார்ச். 27- சேலம் மாவட்டம் தம்மம்பட்டி பாரதியார் பால் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கத் தலைவராக கழகத்தைச் சேர்ந்த பி அசோகன் மீண்டும் தேர்தெடுக்கப்பட்டார்.

சேலம் பால்வள துணை சார்பதிவாளர் பவுன்ராஜ் தலைமை வகிக்க செயலாளர் சி நடேசன் என் பழனிச்சாமி ஆகியோர் முன்னிலையில் தேர்தல்நடை பெற்றது

கழகத்தைச் சேர்ந்த பி அசோகன் தலைவராகவும் துணைத்தலைவராக ஆர். சுப்பிரமணியமும் மற்றும் இயக்குநர்களாக நரசிம்மன், சுப்பிரமணியன் சுந்தரராஜன். ரவிச்சந்திரன், ஆர். எம். பெரியசாமி, பி.ஆறுமுகம்.ஏ. முத்துராமலிங்கம் ஆகியோர் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருவல்லிக்கேணி பகுதி 103வது வட்டத்தில் 30-3-88 அன்று கழக கொள்கைபரப்புச் செயலாளர் சு. முத்துசாமி பேசுகிறார்.

# அன்னையார் உருக்கம்...

(1-ம் பக்க தொடர்ச்சி)

கள். அன்னை ஜானகி எம் ஜி ஆர் பரிவுடன் அந்தக் குழந்தைகளைத் தனது கரங்களில் வாங்கி பெயர்களை சூட்டினார்

பின்னர் திறந்த வேனில் அன்னை நகருக்குள் வந்தார்.

வழியெங்கும் திரளான மக்கள் அன்னையை வரவேற்றனர் அன்னை திறந்த வேனில் நின்றவாறே கைகளை அசைத்தவண்ணம் தொண்டர்களின் வாழ்த்தைப் பெற்றார்.

சாலையின் இருபுறங்களிலும் கொளுத்தும் வெயிலையும் பொருட்படுத்தாது மக்கள் காத்திருந்து அன்னையை தரிசித்தனர்.

சிந்தாமணி புதூர் ஒண்டிப்புதூர், காந்திநகர் ராமநாதபுரம் ஆகிய இடங்களில் கழகக் கொடியை அன்னை ஏற்றி வைத்தார்.

திரளான தாய்மார்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றனர். பல இடங்களில் குழந்தைகளுக்கு பெயர் சூட்டினார்.

அவினாசிரோட்டில் உள்ள அறிஞர் அண்ணா சிலைக்கு அன்னை ஜானகி எம் ஜி ஆர் மாலை அணிவித்தார்.

விமான நிலையத்திலிருந்து அலங்கார் ஓட்டல் வரை 25 கிலோ மீட்டர் தூரம் கொளுத்தும் வெயிலில் நின்றவாறே அன்னை மக்கள் வரவேற்பைப் பெற்றுக் கொண்டார்.

## அன்னையார் பாசம்

அன்னை வெயிலில் வருவதைக்கண்ட தொண்டர்கள் தாயே எங்கள் தலைவர் புரட்சித்தலைவரை கண்ணை இமைபோல காத்த தாயே வெயிலில் வரவேண்டாம் குடைநிழலில் வாருங்கள் என்று குடைகளைத் தந்தனர்.

அன்னை அவற்றை அன்போடு மறுத்து நீங்கள் எல்லாம் வெயிலில் நிற்கும் போது எனக்கு மட்டும் குடையா என்று மறுத்துவிட்டார்.

## பங்கேற்றோர் விவரம்

அன்னை ஜானகிஎம்ஜிஆர் கோவை வந்தபோது வரவேற்பிலும் பொதுக்கூட்ட நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டவர்கள் விவரம் வருமாறு:-

ஜேப்பியார், நெகமம் கந்தசாமி, வலம்புரிஜான்எம்.பி. ஜி. வரதராஜன் எம். பி. திருப்பூர் மணிமாறன், மாவட்ட இணைச் செயலாளர்கள் நா. கருப்புசாமி, க. மருதாசலம், கா. லியாகத்அலிகான், முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் மா. சின்னராசு, வளர்மதி, பொங்கலூர் கந்தசாமி, பல்லடம் பி. என். பரமசிவம் மற்றும் கே. சி. பழனிசாமி மேட்டுப்பாளையம் பழனிச்சாமி உச்சிக் கவுடர் சிவக்குமார்,.

கே. கோபால் பேரூர் சண்முக சுந்தரம் புறநகர் மாவட்ட எம் ஜி ஆர் மன்ற செயலாளர் திருப்பூர் கேசவன் விசைத்தறி பழநிசாமி எஸ் ஆர் கோபால், ஆகியோர் பங்கேற்றனர்.

## ஒன்றிய தலைவர்கள்

இளைஞர் அணி நிர்வாகிகள் டாக்டர் நித்தியானந்தம். சிங்கை நடராஜ் மா கதிர்வேல் காட்டூர் சண்முகம் செல்வி மணிமேகலை வழக்கறிஞர்கள் அமலநாதன் எம் மனோகரன் நாகராசன் பாக்யராஜ்ரசிகர் மன்றம் இரா சுந்தரம் மற்றும் மாவட்ட அண்ணா சலவைத்தொழிலாளர் சங்கச்செயலாளர் ஏ கிருஷ்ணன்

புரட்சித்தம்பி செல்வி மணிமேகலை ஆகியோர் அன்னையை வரவேற்றனர் ஊராட்சி ஒன்றியத்தலைவர்கள் கே. வி. ராமசாமி அன்னூர் நா, சுப்பிரமணியன் இரா. அருண், ஆர். திருமலைச்சாமி மற்றும் அவிநாசி பேரூராட்சித்தலைவர் கே. ஆர். சின்னு சோலை, ஏ. எஸ். ஏ. ரஷீத், காலனி ரங்கநாதன் மற்றும் கோவை புறநகர் மாவட்டக்கழக மன்றமகளிர் அணி மாணவர் அணி தொழிலாளர் அணி களைச்சேர்ந்த திரளான கழகத்தோழர்கள் அன்னையை வரவேற்றனர்.

பெருந்துறை. திருப்பூர் ஆகியநகரங்களுக்கு திருமண விழாவில் பங்கேற்க வந்தபோது திருப்பூர்நகர எல்லையில் திருப்பூர் கேசவன், விசைத்தறி பழனிச்சாமி, அவிநாசி, கே. ஆர், சின்னு, மற்றும் புலுவட்டி பாலு, அய்யப்பன், முகவை கண்ணன். முருகசாமி, அய்யாச்சாமி, சிட்டி எலக்ட்ரிகல்ஸ் பழனிச்சாமி, பி, சண்முகம், தாமோதரன், மற்றும் திரளான கழகத் தோழர்கள் அன்னையை வரவேற்றனர்.

## பஞ்சாப்- அரியானாவில் பி. எச், பாண்டியனுக்கு வரவேற்பு

சென்னை, மார்ச் 27- தமிழக சட்டசபை சபாநாயகர் பி. எச். பாண்டியன் பஞ்சாப் அரியானா மாநிலங்களில் சுற்றுப்பயணம் செய்தார் 21ம் தேதிகாலை அரியானா சட்ட மன்றத்திற்குள் அரியானா சட்டப்பேரவைத் தலைவருடன் சென்றார்.

அவர்கள் சட்ட மன்றத்திற்குள் நுழைந்தபோது உறுப்பினர்கள்பலத்த ஆரவாரத்துடன் கைதட்டி வரவேற்றனர் சட்டமன்றத்தில் லோக்தள உறுப்பினர்கள் 90பேரும் காங்கிரஸ் உறுப்பினர்கள் ஐவரும் இருந்தனர் 21ம்தேதி மாலை அரியானா சபாநாயகர் பி எச் பாண்டியனுக்கு விருந்தளித்தார் 22ம்தேதி பஞ்சாப் சபாநாயகர் விருந்தளித்தார் 22-ம்தேதி இரவு அரியானா தலைமை நீதிபதி ராமசாமி பி.எச்.பாண்டியனுக்கு விருந்தளித்தார்.

இந்த விருந்தில் மாநில ஆளுநர்களும் பங்கேற்றனர்.



**ஏப்ரல் 2 சனிக்கிழமை இதயதெய்வம் புரட்சித்தலைவர் துயிலுமிடத்தை தூய்மைப் படுத்து-ஆடுநர்மாளிகைநோக்கி50ஆயிரம்சைக்கிள் பேரணி**